*Kumaraṉ*

*Āram 1, muttu 41*

*June 04, 1924*

Record no. 313

Registered No. M. 1823. உ "KUMARAN" Karaikudi

சிவமயம்.




" என்கடன் பணிசெய்து கிடப்பதே."

( வாரப் பதிப்பு. )

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

" ஆலயந் தொழுவது சாலவு நன்று." " திரைகட லோடியுந் திரவியந்தேடு."

ஆரம் க. } காரைக்குடி, ரக்தாக்ஷி௵ வைகாசி௴ உஉஉ (4-6-24) { முத்து [illegible]

சமீபத்தில் மஹாத்மா ஜமெஹூ வில் செய்த பிரசங்க சம்பந்தமாய் சுதேசமித்திரன் நிருபர், திருவண்ணாமலையில் வானப்பிரஸ்தராய் வீற்றிருக்கும் ஸம்ஸ்கிருத மகா வித்துவான் பிர்மஸ்ரீ காவியகண்ட கணபதி சாஸ்திரிகளைச் சந்தித்தபோது அவர் கூறிய அபிப்பிராயம் பின் வருமாறு:—

# புத்தரின் கொள்கை.

ஜமெஹூ என்னுமிடத்தில் மகாத்மா புத்த ஜயந்தியின் போது அக்கிராசன உபந்நியாசத்தில், புரோஹிதர்களைப் பற்றியும் வேதங்களைப் பற்றியும் இரண்டொரு வார்த்தைகள் சொன்னார்; அதிலிருந்து, புத்தருடைய மதமானது அவர் செய்த அஹிம்சோபதேசம் புரோகிதர்களுக்குச் சரிப்படாததினால் இந்தப் பரத கண்டத்தில் திரஸ்கரிக்கப்பட்ட தென்று சாதாரணமாகத் தோன்றக் கூடும். இந்தத் துரதிருஷ்டசாலிகளான புரோஹிதர்கள்மேல் கடைசித்தண்ட யாத்திரையை மகாத்மா செய்து முடித்தார். ஹிந்து மத போதகர்களான எல்லா ஆசாரியர்களும் இந்த அஹிம்ஸையைப் பற்றி விரிவாக உபதேசித் திருக்கிறார்கள். அந்த உபதேசகர்களிற் பெரும்பாலார் புரோஹித வர்க்கத்தைச் சேர்ந்தவர்களே யாவர். அஹிம்ஸை சம்பந்தப்பட்ட வரையில் புத்தருடைய அபிப்பிராயத்தை கௌரவப் படுத்தினவர்களுள் புரோகித வர்க்கத்தாரே உலகத்தில்முன்னே நிற்பர். பிராசீனமான உபநிஷத்துகளில் அதிகப் புராதனமான ருக்வேத மந்திரங்களிலும்; இந்த அஹிம்சையானது மிகவும் அதிகமாய்க் கொண்டாடப்பட் டிருக்கிறது. புத்தர் அந்த தர்மத்தை மிகுதியும் விரும்பினவரா யிருந்தபோதிலும், அவர் உலகத்திற்குக்கொடுத்த பிரதானமான விஷயங்க ளிரண்டேயாகும். ஒன்று, க்ஷணிகத்தவ்ஞானம்; இரண்டாவது, பரம வைராக்கியம். தத்துவத்தைப் பற்றிச் சர்ச்சை செய்யும்போது தான் புத்தருக்கும் புரோஹித வர்க்கத்தைச் சேர்ந்த ஆசாரிய புருஷர்களுக்கும் மிகுதியான அபிப்பிராய பேதங்கள் உண்டாகி, புத்த மதமானது பரத கண்டத்தில் பரவாதிருப்பதற்குக் காரணமாயிற்று. ஸ்ரீசங்கர, ராமானுஜ, மத்துவர்களுடைய பாஷியங்களைப் பார்த்தால், புத்தருடைய தத்துவ திருஷ்டியை அவர்கள் கண்டித்தார்களே யொழிய அவருக்குப்பிரியமான அஹிம்ஸையை ஒருவரியிற் கூடக் கண்டிக்கவேயில்லையென் பதுபுலப்படும். வேதத்தினுடைய பிரமாணத்தைப் புத்தர் ஒத்துக் கொள்ளா திருந்தது, அபிப்பிராய பேதத்திற்குக் காரணமா யிருந்தபோதிலும், மாம்ஸத்துடன் கூடிய யாகத்தைப் புத்தர் நிந்தித்ததே அவர் மதம் இந்தியாவில் விஸ்தாரமாய்ப் பரவா திருந்ததற்குக் காரணமாகும் என்று சொல்வது சரியன்று. ஸ்ரீமத்துவர் மாம்ஸத்துடன் கூடிய யாகத்தை த்தூஷித்திருந்தாலும், அவர் பரதகண்டத்தில் பெரியதொரு ஆசாரிய புருஷராக இன்றும் விளங்குகிறார். யாகத்தில் நடந்தேறும் ஹிம்ஸையை மட்டும் நிஷேதிக்கிறது மட்டுமே புத்தருடைய கொள்கையாகும் பக்ஷத்தில், அவர் வேதத்தைப் புறக்கணித்துத் தள்ள வேண்டிய அவ்வளவு அவசரமில்லை. வேதத்தில் பசு சப்தம் தானியாதிகளுக்கும் பிராணிவர்க்கங்களுக்கும் பொதுவாக உபயோகிக்கப்படுகிறது.

'யதன்னம் எஜமனேத்தித் தன்னம் தஸ்ய தேவதா' என்ற நியாயத்தினால் அதிகாரிகள் தங்களுடைய அதிகாரப் பிரகாரம் பசுவின் சப்தத்தின் அர்த்தத்தைக் கொள்ளுகிறார்கள், தற்காலம் புத்த மதம் பரவி [illegible] பிரதேசங்களில் பௌத்த [illegible] சிகள் கூட மாம்ஸ போஜனத்தை விட்டார்களில்லை. ஆதலாலேயே, புத்தர் தம்முடைய மதத்தில் ஹிந்து மதத்திலுள்ள புரோகித வர்க்கத்தார் போல், அஹிம்ஸா தர்மங்களை ஆசரணத்திற்குக் கொண்டு வருவதற்கான கட்டளைகளை விதிக்கவில்லை யென்று தெரிகிறது. ஆதலால் புத்தருடைய அஹிம்ஸா தர்மத்தைப் புரோஹித வர்க்கத்தார் திரஸ்கரித்தார்கள் என்ற விஷயம் சத்தியத்திற்குத் தூரமேயாகும். புத்தருடைய தத்துவ சாஸ்திரக் கொள்கைகளை மாத்திரம் இவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்ற விஷயம் ஸத்தியம். புத்தருடைய மதத்தில் அஹிம்ஸை எப்படித் தியானத்திற்குச் சாதனமாக எடுத்துக் கொள்ளப்பட்டதோ, அப்படியே பதஞ்சலி முதலானவர்களின் யோக மார்க்கங்களில் கூட அஹிம்ஸை பிரதானமான சாதனமாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

மஹாத்மா வேதங்களைப் பற்றிப் பேசுகையில் அவைகள் சந்தர்ப் பானுசாரமாக வளரவேண்டு மென்றும் அப்படி வளர்ந்தால் தான் அவைகளின் தெய்வீகத்தன்மை நிலைத்து நிற்குமென்றும் சொன்னார். சமயாசாரங்களுடைய விஷயத்தில் இந்த ஆத்திரத்தை எல்லாரும் ஒத்துக்கொள்ளுவார்கள். வேதத்தில் சொல்லப்பட்ட தர்மங்கள் சமயாசாரங்கள் அல்ல. சமயாசாரங்களென்றால், ஸ்மிருதி தர்மங்களாகும். அவை ஸநாதன தர்மங்களே யாகும். ஸநாதன தர்மமென்றால் எல்லாக்காலங்களிலும் ஒரே விதமாயிருக்கக் கூடிய தர்மம். வேதங்கள் ஸந்தர்ப்பத்திற் கேற்றபடி வளரவேண்டு மென்றால் ஸநாதன தர்மமானது சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி மாறவேண்டுமென்றே அர்த்தமாகும். அப்பொழுது வேதங்களைப் புதிது புதிதாகச் செய்து கொண்டிருக்கலாமென்று அர்த்தம் செய்

Best copy available.

## ஜாதி சங்கிரமணம்.

—o—

இப்போது இங்கிலாந்திலிருக்கும் லாலா லஜபதிராய் 'டேய்லிஹெரால்டு' பிரதிநிதியிடம் இந்தியாவில் ஜாதிக் கட்டுப்பாட்டின் அழிவைப் பற்றியும் தீண்டத்தகாதோரின் நிலைமை மாறுபடுவதைக் குறித்தும் பின் வருமாறு கூறினார்:—

இந்தப் பிரச்னை இந்தியாவிலிருப்பது எங்களுக்கு வெட்கமே. இதனை முற்றிலும் ஒழிப்பதற்குப் பெருத்த முயற்சிகள் செய்து வருகிறோம். ஆனால் இதனை ஆதாரமாகக் கொண்டு எங்கள் எதிரிகள் இராஜீயவிஷயத்தில் பிரமாதமாகத் தடை யுண்டுபண்ணுவதற்குச் சிறிதும் காரண மில்லை. இந்தியாவில் ஐரோப்பியப் பாதிரிமார் இந்தியக் கிறிஸ்தவர்களை நடத்தும் மாதிரி மிகுந்த கேவலமானது. இந்தியக் கிறிஸ்தவர்களைப் பாதிரிமார் தங்களுடன் கூட விருந்து சாப்பிடும்படி அழைப்பதில்லை யானதால் கிறிஸ்வர்களுக்குள் ஜாதி வேறுபாட்டை உற்பத்தி செய்கின்றனர். கலாசாலைகளின் தலைமை ஸ்தானத்துக்கு இந்தியக்கிறிஸ்தவர்களில் மிகுந்த திறமை வாய்ந்தோரையும் வரவிடாமல் தடுக்க முயல்கின்றனர். இம்மாதிரியான ஒரு குறிப்பிட்ட சம்பவத்தை நான் அறிவேன்.

இது நிற்க, எங்களுடைய இயக்கமானது, விசேஷமாய் வட இந்தியாவில், உண்மையில் சாமான்ய ஜனங்களுடைய இயக்கமாகவே யிருக்கிறது. அங்கே சர்வ இந்திய இந்து மகா சபை நன்றாய் வேலை செய்கிறது. சென்ற வருடத்தில் இச்சபையார் கூடி, 'வைதிக குருமாரின் சம்மதியின்பேரில் தீண்டாமையை யொழிக்கவும் பாடசாலைகளை எல்லா ஜாதியினருக்கும் பொதுவாக்கவும் இந்துக் கோயில்களுக்குள் தீண்டத் தகாதோரைப் புகவிடவும்வேண்டு' மென்று தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்று அவ்வாறே அநுஷ்டிக்கப்பட்டும் வருகிறது. நான் இல்லாத காலத்தில் மேற்கூறிய வழிகளில் எல்லா மாகாணங்களிலும் பிரமாதமாய் வேலை செய்யும்படி திட்டம் செய்திருக்கிறேன். இன்னும் சில மாதங்களில் எங்கள் நாட்டிலிருந்த கடுமையான தீண்டாமைப் பிரச்னை சென்னைமாகாணத்தின் ஒரு சிறு பகுதிக்குள் தான் காணப்படும். அங்கே தீண்டாமையை அடியோடு ஒழிப்பதற்குப் பலத்த தடைகள் இன்னும் இருந்து கொண்டிருக்கின்றன.

---

ள்ள இடம் தருகிறது. தபோபலத்தினால் திரிகால ஞானத்தையடைந்த சில ரிஷிகள் மறைந்திருக்கிற இன்னும் சில ஸநாதன தர்மங்களை இப்பொழுதும் கண்டுபிடிக்கலா மென்ற விஷயத்தை நாங்கள் ஆக்ஷேபிக்க வில்லை. காலத்திற்குத் தகுந்தபடி வேதங்களை சாதாரண புத்தி பலத்தினால் பண்ணலா மென்பது மஹாத்மாவினுடைய வார்த்தைகளுக்கு அர்த்தமாகும் பக்ஷத்தில், அதை வைதிக தர்மக் கொள்கை யுள்ளவர்கள் கஷ்டத்தோடும், இதர மதஸ்தர்கள் ஆநந்தத்தோடும், கிரகிப்பார்கள்.

## காசு கரியாகுங் கதை.

### ௩0,000 ரூபா விற்பனை.

'காசு கரியாய்ப் போகவேண்டுமானால் சீனிவெடி வாங்கிச் சுடு' என்று பழமொழி பேசுகிறார்கள், வேறு வழிகள் பல இப்பொழுது உண்டாயிருக்கின்றன. மேற்கத்திப் பழக்கம் நமக்குண்டானது முதல் செலவுக்கு வழி ஒன்றா? இரண்டா? எல்லாம் வீண் செலவு தான்! பழய காலத்திலிருந்த பயித்தியக்காரப் பெட்டி மக்கள் மண் சட்டி, கல்லுச்சட்டி முதலியவற்றைக் கொண்டு காலங் கடத்தி வந்த கதை நமக்கெல்லாந் தெரியாதா? கொஞ்சம் பணங் காசுள்ளவர்கள் வீட்டில் பித்தளைச் சட்டி. ராஜா வீட்டிலே வெள்ளி தங்கத்தினால் சட்டிகள் செய்யப்பட்டிருக்கும். காலணாவுக்கு வாங்குகிற மண் சட்டிகள் தாம் உடைந்து போனால் உதவாமற் போகக்கூடும். மற்றெல்லாம் திரும்ப விலையாகும். உடைந்து போனால் உருக்கிச் செய்துக் கொள்ளலாம். அழித்துச் செய்யக்கூடிய உலோகத்திலே தான் அக்காலத்திலிருந்தவர்கள் செய்து வைத்து வாழ்ந்தார்கள். இப்பொழுது சீன் மாறிப்போய் விட்டது. பித்தளைச் சட்டி பிடிக்கவில்லை. வெள்ளிச் சட்டி கொள்ளை போய் விடுகிறது. மண் சட்டி கௌரவமில்லை. என்ன செய்கிறது! காலங் கெட்டுப் போய் விட்டது. மேலைத் தேசத்தார் வந்து நம்மை மடக்கிக் கொண்டு குதிரை யேறா வேறு வழி வேண்டுமோ? நம் நாட்டில் செய்யப்படுகிற சாமான்கள் உபயயாகமில்லையென்பதற்கு நம்மே காரணங் கூறுகிறோம். இந்தக் காரணங்களைச் சொல்லும்படி நம்மைப் பழக்கிவிட்டு மங்குச் சட்டிகள் வந்து இறங்கிவிட்டன. மங்குச் சட்டிக்கு இருக்கிற மதிப்பு வேறொன்றுக்குங் கிடையாது. இப்பொழுது மங்குச் சட்டிக்கு சுக்கிர திசை நடக்கிறது. நம் நாட்டிலுள்ள எல்லாச்சட்டிகளையும் ஏறி மிதித்துக்கொண்டு மங்குச் சட்டி ஆட்சி புரிகிறது. இருந்தாலும் இறந்தாலும் உபயோகப்படுகிற பித்தளைப் பாத்திரங்கள் சிறையிடப்பட்டு விட்டன; மகிமை குறைந்து போயின; தேடுவார் இல்லை. அவற்றைச் செய்கிற பெரிய தொழிற்சாலைகளும் குன்றுகின்றன. வேலையாளருக்கும் போதிய பிழைப்பில்லை. ஆனால் வந்தேறுங் குடியாக விருக்கிற உபயோக மற்ற மங்குச் சட்டியானது முப்பதாராயிரம் ரூபாப் பெண்களின் மடியின் மீதும் லட்சாதிபதிகளின் திருக்கரங்களிலும் மிளிர்கிறது. சொந்தக் குழந்தையான பித்தளைப் பாத்திரங்கள் மூலையில் கிடக்கின்றன. அந்நியருடைய பிள்ளையாகிய மங்குப் பாத்திரங்கள் செல்வங் கொழிக்கின்றன.

இந்த மங்கு பாத்திரம் உடைந்து போனால் ஏதாவது காலணாவுக்கு ஆகுமா என்பதை யோசிப்பார் கிடையாது. எதிலாவது சிறு அடிபட்டாலும் நொறுங்கிப் போகிறது. பிறகு அதனை எப்படி முயன்றாலும் சீர்படுத்தமுடியாது. கயவர் குணம்போல மாறுபட்டதை இணக்கமாகத் திருத்த முடிகிறதில்லை. கொஞ்சம் நலிந்தால் எடுத்து எறிந்து விட வேண்டியது தான். சிறு காயப்பட்ட சட்டிகளை உபயோகித்தால் பெருத்த அபாயத்திற் கொண்டுவந்து விடும். அந்த மங்கினுடைய சிறு சில்லானது ஆகாரத்தோடு வயிற்றினுள் சென்று விட்டால், அதோடு தொலைய வேண்டியதன்றி யோசிக்க வேண்டிய வேலை கிடையாது. இவ்வளவு கேவலமான ஒரு பொருள் இந்த நாட்டில் வந்துகும்மாளம் போடுகிறது. கிறுக்குப் பிடித்தவர்களைப் போன்று இந்தச்சாமானை நமது ஜனங்கள் வெறி கொண்டு வாங்குகின்றனர். விலைப் பருவம் வியாபாரிச் சொல்லுவது தான். என்ன சொன்ன போதிலும் வாங்கித் தான் தீரவேண்டும்! இல்லா விட்டால் சண்டை ஓயாது. பல ஆண் மக்கள் அழுது கொண்டே உண்டியலெழுதுகின்றார்கள். மங்குச் சாமான் இல்லாத வீடு அருமையாகவே யிருக்கிறது. ஒவ்வொரு வீட்டிலும் ருOO-முதல் உ000 ரூபா வரை மங்குச் சாமான் கட்டுப்படுத்தப்பட்டிருக்கின்றது. இன்னும் ஒவ்வோரிடத்திலும் வாங்கி வாங்கி அடைகிறார்கள். இதன் கதி என்னவாகுமோ தெரிய வில்லை. நாட்டுக்கோட்டையாருடைய குடும்பங்கள் சுமார் கஉ,000 இருக்கின்றன. அவற்றுள் சுமார் ஒரு கோடி ரூபா விலையுள்ள மங்குச் சாமான்கள் இருக்கின்றன. இன்னும் வாங்கிக்கொண்டேயிருக்கிறார்கள். குன்றக்குடித் தைப்பூச விழாவிற்கு ஒரு மாதம் முன்னர் வந்த கடை இன்னுமிருக்கிறது. அதற்குமுன்னால் எப்பொழுதும் வணிகளும் மோட்டாரும் சிலபெண்மக்களும் இருந்துகொண்டேயிருக்கிறார்கள். உண்டியல் தினந்தோறும் பல எழுதப்படுகின்றன. இப்பொழுது காரைக்குடிச்செவ்வாய் உத்ஸவத்திற்கு வந்த மங்குச் சட்டிக் கடைகளில் சுமார் நாற்பதாயிரம் ரூபா வரை விற்பனையாகி யிருக்கிறது. கடை கொள்ளாமல் பெண்மக்கள் நிறைந்திருந்து கொள்முதல் செய்கிறார்கள். இந்தப் பைத்தியம் என்று ஒழியுமோ? இப்படிப்பட்ட உபயோகமற்ற வழிகளில் பணத்தை வாரி வாரி யிறைப்பதானது பூர்வ காலத்தில் இந்த ஜாதிக் கேற்பட்ட சாபமோ! என்னவோ! வீண் காரியங்களில் போட்டி போட்டுக் கொண்டு கொட்டுகின்றனர். உபயோக மற்றதென்று தெரியாமலு மில்லை. தெரிந்து தெரிந்து அழுது கொண்டும் முனங்கிக்கொண்டுமே கொடுக்கின்றனர். இந்தப் பாவம் எப்பொழுது விமோசனமாகுமோ? இறைவனே அறிவான்!

சமூகாபிமானி.

---



## தென்னிந்தியா ரெயில்வேயில்

# வேலை நிறுத்தம்.

—oo—

சென்ற வருஷத்தில் சிம்லாவிலுள்ள ரெயில்வே போர்டார் தென்னிந்தியா ரெயில்வேயில் வண்டிகள் ஓடும் செலவில் ஒரு லட்சம் ரூபா குறைக்க வேண்டுமெனச் சொனனார்கள். இந்த சிபார்சின்படியே தென்னிந்தியா ரெயில்வே அதிகாரிகள் முதன் முதலில் ஒரு வருடத்துக்கு சிறு தூரத்துக்குச் செல்லும் வண்டிகளில் எஞ்சினுக்குத் தீப்போடும் ஆட்கள் இருவரில் ஒருவரைக் குறைத்து, இவ்வாறே பிறகு நெடுந்தூர வண்டிகளிலும் குறைப்பதாக உத்தேசித்திருந்தனர். தீப் போடும் ஆட்கள் அதிகாரிகளுக்குச் செய்துக் கொண்ட மனுக்கள் யாவும் கவனிக்கப்பட வில்லை. சிறு தூரத்து வண்டிகளில் தீப்போடுவோர் யாவரும் இந்தியர்களே.

இரண்டு வாரங்கட்கு முன் திண்டுக்கல்லிலிருந்து மதுரைக்கு வந்த வண்டி கைகாட்டி மரத்துக் கருகில் நிற்கவியின்றி நின்று விட்டது. இதைப்பற்றி விசாரித்த லோகோ அதிகாரி சம்பந்தப்பட்ட இரண்டு தீப்போடுவோருக்கு அபராதம் விதித்தார். சென்ற புதன் கிழமை இந்த உத்தரவு தீப்போடுவோருக்குத் தெரிய வந்தது. அன்றே நெடுந்தூர வண்டிகளில் வேலை செய்யும் ஆங்கிலோ இந்திய தீப்போடுவோரையும் ஒருவராகக் குறைத்த உத்தரவு அமுலுக்கு வந்தது. அபராதம் விதிக்கப்பட்டோர் அதனை ரத்து செய்யும்படி மேலதிகாரிகளுக்கு மனுச் செய்து கொண்டும் பயனில்லை. அதன்மேல் மதுரையிலுள்ள உ00 தீப்போடுவோரும் ஒன்று கூடி அபராதத்தை ரத்து செய்ய வேண்டுமென்றும் முன்போல் ஓடும் வண்டிகளில் இரண்டு தீப்போடுவோர் நியமிக்கப்பட வேண்டுமென்றும் கேட்டனர். அதிகாரிகள் அதற்கு இணங்காததால் மறுநாள் வியாழனன்று பகல் ஒரு மணி சுமாருக்கு எல்லாத் தீப்போடுவோரும் வேலை நிறுத்தம் செய்து விட்டனர். இதனால் இராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ வண்டியும் சென்னை போட்மெயில் வண்டியும் தவங்கி விட்டன. மதுரையிலிருந்து புறப்பட வேண்டிய திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வண்டியும் சிறு தூரத்துக்குச்செல்லும்எல்லா வண்டிகளும் ரத்து செய்யப்பட்டன. இராமேஸ்வரத்திலிருந்து வந்த போட்மெயில் வண்டியை லோகோ இன்ஸ்பெக்டர் வண்டியோட்டியாகவும், வண்டியோட்டி தீப்போடுவோராகவும், ஒரு கரிக்கூலி கிளீனராகவும் நின்று செலுத்தினர். ஆனால் வேலை நிறுத்தம் செய்திருந்த தீப்போடுவோர் தண்டவாளங்களின் குறுக்கே படுத்துக் கொண்டு வண்டியை ஓட விடாது வழிமறித்தனர். அதன்மேல் போலீஸாருக்கு ரெயில்வே ஸ்தல அதிகாரிகள் சொல்லியனுப்பிப் போலீஸ் அதிகாரிகளும் தமது படைகளுடன் வந்து சேர்ந்தனர். மதுரை ஸ்டேஷனுக்குள் எங்கு பார்த்தாலும் போலீஸார் பந்தோபஸ்து செய்து வருகின்றனர். வடக்கேயிருந்து வந்த வண்டிகளில் வந்த தீப்போடுவோரும் மதுரை வந்தவுடன் எஞ்சினைப் போட்டு விட்டு ஓடிவிட்டனர்.

வியாழனன்று மாலையே திருச்சியிலுள்ள கம்பெனியின் மேலதிகாரிகளுக்கு விஷயம் தந்தி மூலம் அறிவிக்கப்பட்டது. ஏஜெண்டு பி. வி. ஸ்காட் அன்றிரவே மதுரைக்குப் புறப்பட்டு வந்து மறுநாள் வெள்ளிக்கிழமை காலையில் வேலை நிறுத்தம் செய்த தீப்போடுவோரைச் சந்தித்துச் சமாதானப் படுத்த முயன்றார். ஆனால் அவர்கள் தங்களுக்குள்ள கீழ்க்கண்ட குறைகள் நிவர்த்தியானாலன்றித் தாங்கள் வேலைக்குத் திரும்ப முடியாதென்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டனர்:—(க) விதிக்கப்பட்ட அபராதம் உடனே ரத்து செய்யப்பட வேண்டும் (உ) ஓடும் எஞ்சினுக்கு இரண்டு தீப்போடுவோரே நியமிக்கப்படவேண்டும் (௩) இந்தியா கவர்ன்மெண்டாரால் அநுமதிக்கப்பட்டிருக்கும் சம்பள உயர்வு உடனே அமுலுக்குக் கொண்டு வரப்படவேண்டும் (௪) இந்தியத் தீப்போடுவோருக்கும் வண்டியோட்டிகளுக்கும், திருச்சியிலும் மண்டபத்திலும் இருப்பது போலவே, எல்லாவிடங்களிலும் குடியிருக்க வீடு கட்டிக்கொடுக்க வேண்டும் (௫) ஸ்டேஷன்களில் நிறுத்தப்பட்டிருக்கும் எஞ்சினிலிருந்துநெருப்பைத் தள்ளும்வேலை தீப்போடுவோர்க்குக் கொடுக்கக்கூடாது (௬) வேலைக்குத் திரும்பி வரும் ஆட்களுக்கு வேலை நிறுத்தத்தில் சம்பந்தப்பட்டதற்காகப் பின்னால் யாதொரு தண்டனையும் விதிக்கப்படாது.

தீப்போடுவோர் இந்த ஆறு நிபந்தனைகளின் பேரில் உறுதியாய் நின்றனர். ரெயில்வே ஏஜெண்டு இவற்றில் முதல் வேண்டுகோளுக்கு இணங்குவதாகவும், ஓடும் இஞ்சினுக்கு இரண்டு தீப்போடுவோர் கொடுக்கும் விஷயத்தில் தான் உடனே பதிலளிக்கமுடியாதென்றும், ஒரு வாரம் சென்று முடிவு தெரிவிப்பதாகவும், அதற்கிடையில் தீப்போடுவோர் வேலைக்கு வழக்கம்போல் வர வேண்டுமென்றும் கூறினார். ஆனால் தீப் போடுவோர் பிடிவாதமாய் நின்றனர்.

சனிக்கிழமையன்று ஏஜெண்டு கீழ்க்கண்டவாறு ஒரு விளம்பரம் வெளியிடுவித்தார்:"—நாளை மத்தியானம் கஉ மணிக்குள் வேலைக்குத் திரும்பி வாராதோர் வேலையினின்று நீங்கினதாகக் கருதப்பட்டு அவர்களுக்குள்ள உபகார நிதி முழுவதும் மற்றும் சகாயச் சம்பளமும் கம்பெனிக்குச் சேர்க்கப்பட்டுவிடும். அவர்கள் வேலைக்கு வேறு ஆட்கள் நியமிக்கப்படுவர். கம்பெனிக் கட்டிடங்களில் குடியிருப்போர் உ௪ மணி நேரத்துக்குள் காலிசெய்து விட வேண்டும்."

வெள்ளிக்கிழமை முதல் திருச்சி, தஞ்சாவூர், மாயவரம், திருநெல்வேலி, சென்னை, செங்கல்பட்டு, விழுப்புரம் முதலிய விடங்களிலுள்ள தீப்போடுவோரும் வேலை நிறுத்தம்செய்ததால் சிறு தூரத்து வண்டிகள் ஓட முடியவில்லை. தஞ்சாவூர்—நாகபட்டணம் லைனிலும் மூன்று வண்டிகளே யோடின.

திருச்சியில் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கும் பழய தீப்போடுவோரை இப்போது அதிகாரிகள் திரும்ப வேலைக்கு எடுத்து வருகின்றனர்.

பிரதானமார்க்கத்தில்மெயில்,எக்ஸ்பிரஸ் வண்டிகளைத் தவிர மற்ற வண்டிகள் யாவும் ரத்து செய்யப்பட்டிருக்கின்றன. அந்த வண்டிகளையும் ரெயில்வே உயர்தர உத்தியோகஸ்தர் வண்டியோட்டிகளாகவும் தீப் போடுவோராகவும் நின்று ஆயுதந்தாங்கியபோலீஸ் பந்தோபஸ்துடன் செலுத்துகின்றனர். மதுரை திருச்சி ஸ்டேஷன்களில் பிரயாணிகள் மிகுதியாகத் தங்கிவிட்டனர். கல்யாண முகூர்த்தங்களும் சில தவக்கப்பட்டன. சாமான வண்டிகள் யாவும் ரத்து செய்யப்பட்டிருக்கின்றன.

சனிக்கிழமை மாலை ரெயில்வே ஏஜெண்டு லண்டனிலுள்ள ஹோம் போர்டினிடமிருந்து வந்த தந்தியை யநுசரித்து மதுரையில் வேலை நிறுத்தம் செய்திருந்த தீப் போடுவோரைக் கூட்டி, ௫0 மைலுக்கு மேல்பட்ட தூரங்களுக்கு இரண்டு பேர் கொடுப்பதாகவும், ௫0 மைலுக்குட்பட்ட தூரத்துக்குப் பின்னால் யோசித்து முடிவு சொல்லுவதாகவும் தெரிவித்ததின் பேரில் ஞாயிற்றுக்கிழமை முதல் எல்லோரும் வேலைக்குத் திரும்பி விட்டனர். திருநெல்வேலி, திருச்சி, தஞ்சாவூர், சென்னையிலுள்ளோரும் மதுரையின் முடிவை எதிர் பார்த்து நின்றனர். விழுப்புரத்திலுள்ள உ௪0 தீப்போடுவோரும் நின்றுவிட்டதால் அவ்விடத்தின் நிலைமை கஷ்டமாயிருப்பதை முன்னிட்டு ஏஜெண்டு அங்குச் சென்றிருக்கிறார்.

இவ்வாறாக குறுகிய பாதை (மீட்டர் கேஜ்)யில் வேலை நிறுத்தம் ஒருவாறு முடிவு பெற்றதும் அகலப்பாதை (பிராட் கேஜ்)யில் போத்தனூர் வண்டித் தொழிற் சாலையில் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்திருக்கின்றனர். இதற்குக் காரணம், போத்தனூரிலுள்ள ரெயில்வேத் தொழிலாளிகள் சென்ற சனி யன்று மகாநாடு கூட்டப் போவதாகவும் அதற்கு டாக்டர் வரதராஜுலு நாயுடு அவர்கள் தலைமை வகிக்கப் போவதாகவும் ஏற்பாடு நடைபெற்றது. ஆனால் ரெயில்வே அதிகாரிகளின் வேண்டுகோளின்மீது கோயம்புத்தூர் டிவிஷனல் மாஜிஸ்டிரேட் டாக்டர் வரதராஜுலுநாயுடுவைத் தமது டிவிஷனுக்குள் வரக்கூடாதென்று தடையுத்தர விட்டனர். வைக்கத்திலிருந்து சிறுவண்ணூர் (ஷோரனூர்) மார்க்கமாய்த் திரும்பிய டாக்டருக்கு இந்த உத்தரவு சிறுவண்ணூரில் கொடுக்கப்பட்டது. அதனால் டாக்டரவர்கள் ரயில் மார்க்கமாய் வர வியலாது மோட்டாரில் பொள்ளாச்சி, திருப்பூர் மார்க்கமாய்ச் சேலம் போய்ச் சேர்ந்தார். இதனால் போத்தனூர் ரெயில்வே தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்திருக்கின்றனர். ஏஜெண்டு அங்கு சென்றிருக்கிறார்.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போதும் மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.

—அருணகிரிநாதர்.

குமரன், காரைக்குடி.
ரக்தாக்ஷி ௵ வைகாசிமீ ௨௨௳.

## புத்த மதம் என் புறக்கணிக்கப்பட்டது?

இந்தவாரம் முதற்பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கிற விஷயத்தை ஊன்றிப் படிக்குமாறு வேண்டுகிறோம். புத்த மதத்தைப் பற்றியும் அதை யொட்டி அஹிம்ஸா தர்மத்தைப் பற்றியும் மகாத்மா கூறியுள்ள விஷயங்கள் அதில் காணப்படுகின்றன. புத்த மதத்தை இந்நாட்டை விட்டுத் துரத்த வேண்டுமென்று ஆசாரியர்கள் முயன்றதற்குக் காரணம், அஹிம்ஸா தர்மத்தைப் புத்தமதங் கொண்டிருந்த தன்று என்று மகாத்மா கூறுகிறார்கள். பொதுவாக நமது மக்கள் பலர் அஹிம்ஸா தர்மத்தில் புத்தர் தலைக்குமேற் போய்விட்டபடியால் புத்தமதத்தை நமது ஆசாரியர்கள் அழிக்க முற்பட்டன ரென்று கூறுகின்றனர். இன்னுஞ் சிலர் அஹிம்ஸா தர்மத்தைப் பரப்புவோர் சமணராவரென்றும் புத்தராவர் என்றும் கூறமுற்படுவது நமக்கு வியப்பை யுண்டு பண்ணுகிறது. அஹிம்ஸா தருமத்தை நமது ஆசாரியார் யாவருமே போற்றியிருக்கின்றனர். யாவராலும் போற்றப்பட்டதான ஒரு கொள்கை, தீவிரமாகச் செல்வதை முன்னிட்டு அழிக்கப்படுமானால், அது பெரியோர் செயலாகுமா?

புத்தர் மாமிஸத்தோடு கூடிய யாகத்தைக் கண்டித்ததே அவர் மதம் இந்தியாவில் விஸ்தாரமாய் பரவாதிருந்ததற்குக் காரணமாகும் என்றும் சால்வது சரியன்று. ஸ்ரீமத்வர் மாம்ஸத்துடன் கூடிய யாகத்தைத் தூஷித்திருந்தாலும், அவர் பாத கண்டத்தில் பெரியதொரு ஆசாரிய புருஷராக இன்றும் விளங்குகிறார். யாகத்தில் நடந்தேறும் ஹிம்சையை நிஷேதிக்கிறதுமட்டுமே புத்தருடைய கொள்கையாகும் பக்ஷத்தில் அவர் வேதத்தைப் புறக்கணித்துத்தள்ள வேண்டிய அவ்வளவு அவசரமில்லை. வேதத்தில் பசு சப்தம் தானியாதிகட்கும் பிராணிவர்க்கங்களுக்கும்பொதுவாக உபயோகிக்கப்படுகிறது.

இவ்விஷயத்தை அன்பர்கள் உற்று நோக்குதல் வேண்டும். இப்பொழுது முக்கியமாகக் கருதப்படுகிற வேத மதங்களுள் ஒன்றென்று கொள்ளப்படுகிற மத்வ மதம் யாகத்தில் உயிர்க்கொலை கூடாதென்று கண்டிக்குமானால், அதனையும் சமண மதமென்றும் புத்த மதமென்றுங் கூறுவதா? மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது புத்த மதக் கொள்கை அஹிம்சையைத் தலைமையாகக் கொண்டுள்ளதென்று தோற்றுகிறது. அம்மதத்தை நம ஆசாரியர்கள் புறக்கணித்தொதுக்குவார்களானால், ஜீவகாருண்யக் கொள்கையும் தள்ளத்தக்கதோ? அல்லது அக்கொள்கையுடையோர் யாவரும் புத்தரும் சமணருமாவரென்று கூறிவிடுவதா? அஹிம்சையை முக்கிய நோக்கமாகப் புத்தர் கொண்டிருந்ததோடு வேதத்திற்கு முரணான தத்துவக் கொள்கைகளையும் கொண்டிருந்தாரென்பதை உணர்தல் வேண்டும். தமது கொள்கைக்கு உடன்பாடில்லாததான கொள்கையை யுடையகாரணத்தால் வேதத்தையும் புத்தர் புறக்கணிக்கத் தலைப்படவே, நமது ஆசாரியர்கள் தத்துவக்கொள்கை முரண்பாட்டால் உண்டாகுங் கேட்டை நோக்கி, அம்மதத்தைப் புறக்கணிக்க முன் வந்திருக்கின்றனர். இதனை யுணராத மக்கள் பலர் அஹிம்சா தர்மத்தைத் தீவிரமாகப் பிரசாரஞ் செய்ய முற்பட்டதற்காகவே புத்த மதங் கண்டிக்கப்பட்டதென்னுங் கூற்றுத் தவறுடையதென்பதை மகாத்மா அவர்கள் நன்கு காட்டியிருக்கிறார்கள். மகாத்மா கூறும் மற்றொன்றையும் நோக்குதல் வேண்டும். யாகத்தில் உயிர்க் கொலை கூடாதென்பது மட்டும் புத்தரது கொள்கையாகுமானால் புத்தர் வேதத்தைப் புறக்கணிக்க வேண்டிய அவசியமில்லை யென்றருளுவதை யுணர வேண்டும். இதனால் உயிர்க் கொலை கூடாதென்பாருக்கும் வேதத்தில் இடமுண்டென்பது கிடைக்கிறதன்றோ? பசு என்பதற்கு சுவாமி சிரத்தானந்தர் என்ன பொருள் கூறியிருக்கிறாரோ—தயானந்தர் என்ன பொருள் கொண்டாரோ—அதே பொருள் உண்டென்று மகாத்மா கூறியருளுவதையும் சிந்தித்துப்பார்த்தல் வேண்டும். மேலும்,

> புத்த மதத்தில் அஹிம்சை எப்படித் தியானத்திற்குச் சாதனமாக எடுத்துக்கொள்ளப்பட்டதோ அப்படியே பதஞ்சலி முதலானவர்களின் யோகமார்க்கங்களில் கூட அஹிம்ஸை பிரதானமான சாதனமாக எடுத்துக் கொள்ளப்பட்டது

என்று கூறப் பெற்றிருப்பதையும் உற்று நோக்குதல் வேண்டும். அஹிம்சை பெருந்தான் மதிப்புப்பெற்றிருக்கிறது. ஆனால் இவ்வுண்மை சிலருக்குப் புலப்படாதிருப்பதற் கென் செய்யலாம்? இறைவனே நல்ல உணர்வை அவர்கட்களிப்பாராகவென்று வணங்குவோம்.

---

## எண்டிசைக் காட்சி.

### ரப்பர் விலை ஏறுமோ?

இரண்டு வாரங்கட்கு முன் லண்டனில் ரப்பர் விலை பவுண்டு ஒன்றுக்கு ௩௦ காசு அல்லது ஒன்பதே முக்கால் பென்சாகக் குறைந்து விட்டது என்று மலாய் நாட்டுப் பத்திரிகைகள் ஓலமிடுகின்றன. மலாய் நாட்டில் ரப்பர் உற்பத்தி செய்யும் தோட்டக்காரரில் பிரபலஸ்தரான டபிள்யூ. எல். பிராடன் என்பார் 'மலே மெயில்' பத்திரிகையில் 'மரணவஸ்தை' என முகுடமிட்டு ரப்பர் வீழ்ச்சியைப் பற்றி நீண்டதோர் கட்டுரை வரைந்திருக்கிறார். அதில் அவருடைய ரப்பருக்குத் தோட்டத்திலேயே பவுண்டு ஒன்றுக்கு அ பென்சு வீதம் விலை கொடுப்பதாகக் கேட்கிறார்கள் என்று கூறுகிறார். கோலாலம்பூரில் ரப்பர் தொழிலை மேற் கொண்டிருந்த சுமார் இருபது சீனர்கள் முறிந்து போய் விட்டதாகச் செய்தி எட்டுகிறது. ரப்பர் கட்டுப்பாட்டினால் உற்பத்தியை நூற்றுக்கு அறுபதாகக் குறைத்திருக்கின்றனர். இவ்வருஷத்தில் சென்ற வருடத்தைப் பார்க்கிலும் ௪௨௫00 டன் அதிகமாகச் செலவழியுமானால் ரப்பர் ஒரு ஷில்லிங் மூன்று பென்சாக விற்கப்படலாம். ஆனால் இதற்கு மார்க்கமிருப்பதாகத் தெரிய வில்லை, ரப்பர் விலையைத் தூக்கி விடுவதற்காகப் பலர் பலவிதமான யோசனைகள் கூறுகின்றனர். உலகத்தில் ரப்பரை வாங்குவோர் பெரும்பாலும் அமெரிக்கரே. இவர்கள் ஒன்று கூடிக் கட்டுப்பாடாய்த் தங்களுக்கு வேண்டிய அளவு கிடைக்குமென்பது நிச்சயமாய்த் தெரியுமாதலால் விலையை ஏற விடாமல் குறைத்துக் கொண்டு வருகின்றனர். ரப்பர் தொழிலுக்கு ரப்பர் கிடைக்காவிட்டால் தொழில் நடபெறு தென்பதைத் தோட்டக்காரர்கள் உணர்ந்து ரப்பர் வாங்குவோரைப் போலவே தாங்களும் ஒன்று சேர்ந்து, உலகத்தில் தேவையான ரப்பரின் அளவையும் அதில் மலாய் நாடு இலங்கை டச்சு கிழக்கிந்திய தீவுகள் ஒவ்வொன்றிலும் இவ்வளவு உற்பத்தி செய்யலாமென்றும் நிர்ணயித்துக் கொண்டு, தங்களுக்குக் கட்டுமான விலையையும் குறிப்பிட்டு அவ்விலைக்குக் குறைந்து ரப்பர் உற்பத்தி செய்வோர் எவரும் விற்பனை செய்யக் கூடாதென உறுதியான கட்டுப்பாடு செய்து கொள்ளவேண்டுமென பிராடன் என்பார் யோசனை கூறுகிறார். மலாய் நாடு தான் உலகத்தில் பெரும்பான்மையான ரப்பர் உற்பத்தி செய்து வருவதால், அந்நாட்டு கவர்ன்மெண்டார் கூடிய விரைவில் ரப்பரைக் கைதூக்கி விடுவதற்கு வேண்டிய வழிகளை இப்போதும் ஆலோசித்துக்கொண்டிருக்கிறார்களென்றே நம்புகிறோம்.

### "நவசக்தி."

தென்னாட்டு உண்மைத் தேசாபிமான ரத்தினமாக விளங்கும் ஸ்ரீமாந் திரு. வி. கல்யாண சுந்தர முதலியாரை நாம் புதிதாக நமது நேயர்கட்கு அறிமுகப்படுத்த வரவில்லை. அப்பெரியாரால் நடைபெற்றுவருகிற அழகிய வாரப்பதிப்பான நவசக்திப்பத்திரிகைக்கு இணையாகத்தென்னிந்தியாவில் வேறு பத்திரிகை கிடையாதென்று துணிந்துகூறுகிறோம். 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' யென்றகொள்கையோடுழைத்துவருகிற கலியாணசுந்தரரது படைக்கலமாகிய நவசக்தியை எவ்வளவு பலப்படுத்த முயன்றாலும் அதன் பயன் வேறெங்கும்போகாது. மீண்டும் தமிழ் மக்களிடையே வந்துசேரும். இதைப்பலரும் அறிந்தே யிருக்கின்றனர். சில மாதங்கட்கு முன்னர் இப்பத்திரிகையை தினப்பதிப்பாக்க முயற்சி நடைபெற்றது. ஆனால் சில அன்பர்கள் மட்டுமே பொருளுதவமுன்வந்தபடியால் மும்முறைப்பதிப்பொன்று வெளிவரலாயிற்று. மும்முறையை நடத்துவதில் ஆசிரியர் பட்டபாடு கொஞ்சமல்ல, எனினும் வழக்கம்போல் ஆதரிப்பார் இல்லாத காரணத்தால் மும்முறைப்பதிப்பு நிறுத்தப் பட்டுவிட்டது. இனி எப்போதும் நடைபெற்று வருகிறபடி வாரப்பதிப்பாகவெளிவரும். அதனை யாவது தமிழ் மக்கள் ஆதரித்துத் தமிழ் நாட்டிற் பெரும் பத்திரிகையாக நிலவுமாறு செய்வார்களென்று நம்புகிறோம்.

### பிடிக்குப்பிடி தக்ஷிணை.

தபாலாபீஸ்காரர் ஒரு புதிய சட்டம் பிறப்பித்திருக்கின்றனர். "ஒரு பார்சலை ஒரு குறிப்பிட்ட விலாசத்திற்கு அனுப்பி, அவ்விடத்தில் விலாசதார் இல்லாமல் விலாசம் மாற்றும்படி ஏற்பட்டால் அவ்வாறு செய்யும் ஒவ்வொரு முறையும் பார்சல் கூலியில் பாதிப்பங்கு அதிகமாகவாங்கப்படும். மாற்றப்பட்ட விலாசம் அதே தபாலாபீசைச் சேர்ந்திருந்தாலும் அல்லது அதே ஊரிலிருந்தாலும் அதிகக் கட்டணம் கிடையாது" என்றொரு உத்திரவு கிளம்பியிருக்கிறது. எந்தெந்த வழியாகப் பணம் வசூலிக்க இடமுண்டென்று கண்ணில் எண்ணை யூற்றிக் கொண்டு பார்த்து ஒவ்வொன்றிலும் வரி யேற்றப்பட்டு வருகிறதென்பதை இவ்வுத்திரவும் வலியுறுத்துகிறது.

---

## உள்ளூர்ச்செய்தி.

இவ்வூர் வடக்குத் தெருவில் பெ. வீராசாமி நாயுடு என்பார் மகன் நாராயணசாமி நாயுடுவுக்குச் சமீபத்தில் நடைபெற்ற விவாகத்தின் போது மணமகனுக்கும் மணப்பெண்ணுக்கும் கதராடையணிவித்திருந்தது என அறிகிறோம். மணமகன் மலாய் நாட்டில் காஜான் என்னுமிடத்திலிருக்குங் காலத்தில் தேசீய கைங்கரியம் வெகுவாய்ப் புரிந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

---

## கப்பற் செய்தி.

'எக்ரா' கப்பல் நாளிது வைகாசி மாதம் ௨௭௳ சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படும்.

'எல்லங்கா' கப்பல் இரங்கூனிலிருந்து நாளிது வைகாசிமீ ௨௭௳ திங்கட்கிழமை சென்னை வந்து ௨௮௳ இரங்கூனுக்குப்புறப்படும்.

'டீஸ்டா' கப்பல் இன்று சென்னையிலிருந்து புறப்பட்டு நாகைக்குப் போய் அங்கிருந்து ௨௫௳ ஞாயிற்றுக்கிழமை காலையில் மலாய் நாட்டுக்குப் புறப்படும்.

---

## தந்திச்செய்தி.

### பினங்கு, வைகாசிமீ ௨௦௳

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | ௧௩௫-0-0 |
| சயம் விலை | ௬0௲-0-0 |
| ரப்பர் விலை | ௪௩-0-0 |

### இரங்கூன், வைகாசிமீ ௨௦௳

| | |
|---|---|
| பெரிய ஆலை அரிசி | ௫00-0-0 |
| சிறிய ஆலை அரிசி | ௫௪0-0-0 |
| மீடோன் | ௫0௫-0-0 |
| படகு நெல் | ௨0௨-0-0 |
| ரயில் நெல் | ௧௯௮-0-0 |
| வெள்ளை பீன்சு புதிது | ௨௭0-0-0 |
| உளுந்து | ௩௫0-0-0 |
| துவரை | ௪௫0-0-0 |
| தட்டப்பயறு | ௪௪0-0-0 |
| காராமணி | ௨௮0-0-0 |
| கடலை | ௩0௫-0-0 |
| மொச்சை | ௪௧0-0-0 |
| பொற்காசு (பவுன்) | |
| வெள்ளி ஒரு நூ எடை | |
| நடப்பு வட்டி | 0-௧௧-௩ |

பணம் கிராக்கி.

(த. வை. ஊ.)

### உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0-௭-0 |
| இரங்கூன் உண்டியல் வட்டம் | ௯-௪-0 |
| சென்னை நடப்பு வட்டி | 0-௧௧-0 |

---

## கௌரவப் பட்டங்கள்.

சிவகெங்கை ஜமீன்தார் முத்துவிஜயரகுநாத துரைசிங்கம் அவர்கட்கு "ராஜா" பட்டமும், காரைக்குடி யூனியன் போர்டுத் தலைவரும் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வர வித்தியாசாலை நிரந்தர அக்கிராசனருமான ஸ்ரீமான் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கட்கு "ராவ்பகதூர்" பட்டமும், பள்ளத்தூர் ஸ்ரீமாந் உ. அ. உ. க. லெட்சுமணன் செட்டியாரவர்கட்கு "ராவ் பகதூர்" பட்டமும் ஜியார்ஜ் மன்னரின் பிறந்தநாட் கொண்டாட்டத்தை முன்னிட்டு வழங்கப் பெற்றிருக்கின்றன. பிள்ளையார்பட்டிக் கோவிலாரிலும், காரைக்குடியிலுள்ளாரிலும் ஸ்ரீமாந் சிதம்பரஞ் செட்டியாரவர்களே முதல்வராக அரசாங்கப் பட்டம் பெற்றவர்களாவர்.

## ஐயவினு.

ஒரு குடும்பத்தில் தாயும் ஒரு பெண்ணு மிருக்கிருர்கள். அந்தத் தாயாரவள் பெண்ணின பொருட்டு ரூபாய் முப்பத்தையாயிரம் மாப்பிள்ளை யிடத்தில் வாங்கி, எண்ணுயிரம் ரூபாவுக்கு நகையும், பித்தளைப் பாத்திரம் வெள்ளிப் பாத்திரம் மங்குப் பாத்திரம் புடவை மற்றச்சாமான்கள் வகையருவில் ரூபா மூவாயிரமும், சாப்பாடு வகையருச் செலவு ரூபா இரண்டாயிரமும், சீதனம் ரூபாய் இரண்டாயிரமும், ஆக ரூபா பதினையாயிரம் செலவு செய்து கலியாணம் முடிக்கப்பட்டது. கலியாணமாகிச் சில வருஷத்தில் பிள்ளை பெருமல் பெண் இறந்து போனல், நமது சமூக வழக்கப்படி இந்தப்பதின் மூவாயிரம் ரூபா சொத்தையும் பெண்ணின் தாயார் கொண்டு போவது வழக்கமாக விருந்து வருகிறது. அந்த தாயின் சொத்தில் காலணக் கூடச் சேராமல் முற்றும் மாப்பிள்ளையின் பணமாகவிருந்தும், அதை தாயைச்சேருவது நீதியா? மாப்பிள்ளை தன் கையிலிருந்த பணத்தோடு கூடக் கடனும் வாங்கிக்கொடுத்திருக்கும்போது, மனைவியை இழந்தது மன்றித் தன் வீட்டிற்குத் தன் பணத்தினல் வந்த பொருளையும் பட்டியல்படி திருப்பிக் கொடுப்பது நியாயந்தானு!

தனவைசியன்.

## கவனிப்பார்களா?

கொப்பனைப்பட்டி தபாலாபீஸில் அரையணு தபாற்றலை ஒரு போதும் கிடைப்பதேயில்லை. இதனல் ஜனங்கள் பெருங் கஷ்டப்படுகின்றனர்கள். அரையணு தபாற்றலை ஒட்டவேண்டியதற்கெல்லாம் ஒரு அணு தபாற்றலை ஒட்டவேண்டியதாக இருக்கின்றது. தபாற்கூலி இரட்டிப்பாக ஆக்கப்பட்டு ஜனங்கள்வருந்தும் இக்காலத்தில் அதிகமாய்க்குறிக்கப்பட்ட அளவிற்கு மேலும் ஒட்டவேண்டியதாக இருக்கின்றது. இதனைத் தபாலதிகாரிகள் கவனிப்பார்களா? கவனித்து இவ்வூர் தபாலாபீஸில் அரையணு தபாற்றலை கிடைக்கும்படி செய்து இப்பெருங் கஷ்டத்தை நிவர்த்திக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன் என்று ஸ்ரீமாந் எஸ். இராமநாதன் எழுதுகிருர்.

## நச்சாந்துபட்டி.

இவ்வூருக்கு அடுத்துள்ள கோட்டூர் சந்திரமயகி யம்மன் திருவிழா மிக ஆடம்பரமாக நடைபெற்று நாளது மாதம் ௧௪௳ யோடு முடிவடைந்தது. வழக்கம்போல் வேசி ஆட்டமும் வெகு சிறப்பாக நடைபெற்றது. இத் திருவிழாவை முன்னிட்டுக் கூழிபிறை சிவனடியார் திருக்கூட்டத்தார் நாளது மாதம் ௧௧௳ மாலை இவ்வூர் முழுதும் பஜனை செய்து ஏராளமான துண்டு பிரசுரங்களும் வழங்கினர். பின்னர் இரவு ௯-மணிக்கு இவ்வூர் கலைமகள் வாசக சாலைக்கு முன்பாக சீவகாருண்ய விஷயமாய்ச் சில மெய்யன்பர்களால் அன்புநதம்ப அழகாக உபந்நியசிக்கப் பெற்றது. அவ்வமயம் ஆண் பெண் இருபாலாரும் ஏராளமாகக் கூடி இருந்தார்கள். பாணகம் பாற்பொங்கல் அதிகமாக நடை பெற்றன. இனி மேலும் பக்தி மணங்கமழும் பாற்பொங்கலிட ஸ்ரீ அம்பிகை கிருபை புரிவாளாக என்று ஸ்ரீமாந் ராம. சு. வயி. வயிரவன் செட்டியார் அவர்கள் எழுதுகிருர்கள்.

## தேவகோட்டை.

**சிவக்கமசித்தாந்த பரிபாலன சங்கம்:**—இச்சங்கத்தின் ௮-வதாண்டு விழா கோயமுத்தூர் வக்கீல் ஸ்ரீமாந் C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தலைமையில் ௨௦௳ மாலை ௪-மணிக்கு ஆரம்பமாகி நடைபெறுகின்றது. முதலில் கடவுள் வாழ்த்து பாடப் பெற்றவுடன் திருவாளர் அரு. அரு. சோம. அருணுசலச் செட்டியாரவர்கள் வந்தனேபசாரப் பத்திரம் படித்து அக்கிராசனருக்கு அளித்தார்கள். திருவாளர் அழ. சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் அறிக்கைப் பத்திரம் வாசித்தார்கள். தலைவரவர்கள் தமது அழகிய முகவுரை உபந்யாசத்தை சுருக்கமாகச் செய்தார்கள். ஸ்ரீலஸ்ரீ கலியாணசுந்தர சிவாச்சாரியாரவர்கள் 'ஆகமப்பிரமாணம்' என்னும் பொருள் பற்றி ஓர் உபந்யாசம் செய்தார்கள். கோயமுத்தூர் திருவாளர் சி. எம். ராமச்சந்திரன் செட்டியாரவர்கள் 'வித்தகப்பாடல்' என்பதைப் பொருளாகக் கொண்டு தேவாரத்திலுள்ள அரும் பெரும் விஷயங்களை யெடுத்து விளக்கிக் கேட்டார்ப்பிணிக்கும் தகைய பிரசங்க மொன்றைச் செய்தார்கள். தலைவரவர்கள் அபிப்பிராயங் கூற அன்று சபை நிறைவெய்தியது. ௨௧௳ யன்று பிற்பகல் ௪-மணிக்குக் கூடியது. தமிழ்மறை யோதப் பெற்றது. திருவாளர் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் 'சமய அறிவும் பொது ஜனங்களும்' என்பது பற்றி யொரு உபந்யாசம் புரிந்தார்கள். இன்னும் சபை நடந்து கொண்டிருக்கிறது. இன்னும் பல அன்பர்களுடைய உபந்யாசங்கள் நடைபெற வேண்டியதிருப்பதால் மூன்றுநாளாக நடத்த உத்தேசித்திருக்கிருர்கள்.

**மாணவர் சங்கம்:**—இச்சங்கத்தின் ஐந்தாம் ஆண்டு நிறைவு விழா மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசியான வக்கீல் டி. வி. ஸ்ரீநிவாசய்யங்காரவர்களின் தலைமையில நாளிது வைகாசிமீ ௨௬, ௨௭ தேதிகளில் நடைபெறும். அவ்வமயம் திருவாளர்களான நா. சி. முத. முத்தையா செட்டியார், சொ. முருகப்ப செட்டியார், நகரத்தார் கலாசாலைத் தலைமை யாசிரியர் சுந்தரமய்யர் B. A. L. T., மெ. அரு. நா. நாராயணன் செட்டியார், வெ. முத்தையா செட்டியார், மோ. வே. கோவிந்தராஜய்யங்கார், அரு. சோமசுந்தர செட்டியார், கோ. வைத்திலிங்கம்பிள்ளை முதலியோர் உபந்யாசம் புரிவார்கள்.

## பேரட்டுக் கோட்டை.

இவ்வூரில் ௨௧௳ இரவு ௧௦-மணிக்கு ஒரு கூட்டங்கூடியது. இவ்வூர் ஜனங்களும் பக்கத்துக்கிராமங்களிலுள்ள ஜனங்களுமாக சுமார் ௪00 பேர் கூடியிருந்தனர். தேவகோட்டை திருவாளர்களான வெ. முத்தையா செட்டியாரவர்களும், நா. முத. காசிநாதன் செட்டியாரவர்களும், சொ. முருகப்ப செட்டியாரவர்களும் 'கள்ளுண்ணுமை' 'சுதரூடுத்தலின் அவசியம்' 'மகாத்மாவின் பெருமை' 'பிறப்பின்பயன்' என்ற விஷயங்களைப்பற்றி அழகான உபந்யாசங்களைப்புரிந்தார்கள். ஷண்முகநாதபுரம் திருவாளர் சுப. முத்தையா செட்டியாரவர்கள் உபசாரம் சொல்ல சுமார் ௧௨ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது.

## அமராவதி புதூர்.

இவ்வூருக்கருகிலுள்ள உசிலாண்டியில் தாணிச்சாவூரணி அம்மன்கோவில் ராமன் செட்டியாரவர்கள் மகன் சீதை ஆச்சியின் பொருள் கொண்டு அமராவதி புதூர் ஸ்ரீமாந் வயி. ராம. சின்னையா செட்டியாரவர்களால் அழகிய தண்ணீர்ப்பந்தர் ஒன்று கட்டப்பெற்று ௨௨௳ யன்று காலையில் அதன் திறப்புவிழா நடைபெற்றது. பல அன்பர்கள் விஜயஞ் செய்திருந்தனர். கட்டிடம் இடம் வகையருவில் சுமார் ரூ ௩,000 செலவாகியிருக்கின்றதென் றறிகிரேம்.

## மகாத்மா கலிபா ஆவரோ?

சுவாமி சிரத்தாநந்தரால் டில்லியில் பிரசுரிக்கப்பெறும் 'தேஜ்' என்னும் உருதுப் பத்திரிகையில் மவுலாணு ஹாஸன் நிஸாமி என்பார் மகாத்மாவுக்கு ஒரு வியப்பான விண்ணப்பத்தை வெளியிட்டிருக்கிருர். அதில் மகாத்மாவை மகமதிய மதத்தைத் தழுவும்படி மவுலாணு விரும்புகிருர். இந்த வேண்டுகோளில் மகாத்மாவுக்கு நன்மையையே விரும்புவதன்றி, இன்னும்மேலான நோக்கமும் அமைந்திருக்கிறதாம். எவ்வாறெனில், ஆசியா, ஆபிரிகா, ஐரோப்பா கண்டங்களிலுள்ள மகமதிய பிரஜைகளை ஒன்று சேர்த்துப் புத்துயிரளித்தற்கு அதுவேதுவாகுமாம். இஸ்லாம் மதத்தைத்தழுவினல், மகாத்மா தனக்கு மிகவும் உகந்த இந்து மதத்தின் உண்மைகளுக்கு ஒருமேன்மை கொடுப்பதன்றி, அதனல் இந்து, பார்ஸி, கிறிஸ்தவமதங்களின் மறுக்கமுடியாத பெருமைகளைப் பாதுகாத்தற்கும் முடியுமாம். இந்து முஸ்லிம் ஒற்றுமையும் மகாத்மா மகமதியராவதால் பலப்படுமாம். அப்படியானல் மகாத்மாவின் பெருங்குணமே மகமதிய உலகம் முழுவதையும் ஆகர்ஷித்து மகாத்மாவின் முக்கிய நோக்கமாகிய இந்தியாவின் சுதந்தரமும் உலக சமாதானமும் சித்தியாகுமாம். இதனல் இந்துக்கள் வருத்தப்பட வேண்டிய காரணமில்லை; ஏனெனில் மகாத்மா இவ்வாறு நடந்து கொண்டால் இந்து மதத்தின் பெருமை அதிகரிக்குமென்றும் வற்புறுத்தப் படுகிறது. மகாத்மாவை இஸ்லாத்தின் கலீபா பதவியில் வைத்துப் பார்க்க விரும்புவதாகவும், உலகத்தில் சமாதானத்தை நிலைநாட்டுவதற்குத்திறவுகோலாக மகாத்மா இஸ்லாத்தைத் தழுவுவாரென்று உறுதியாய் நம்புவதாகவும் மவுலானு கூறுகிருர்.



## பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கட்டுப்பாடு.

ஸ்காட் நியரிங் என்பார் நியூ யார்க் 'நேஷன்' பத்திரிகையில் எழுதியதின் சாராம்சம்:—

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துள் ௪௦ கோடி ஜனங்களுக்கு அதிகமாகவே அடங்கி யுள்ளார். இவர்களில் பெரும்பாலார் ஆங்கிலம் பேசுவது மில்லை; கிறிஸ்தவர்களு மல்லர்; பிரிட்டிஷ் ஜாதியாரிலும் முற்றிலும் வேறுபட்ட ஜாதியினரேயாவர். ஆனதால், பாஷையாவது மதமாவது ஜாதியாவது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒன்றுபடுத்தவில்லை என்பது பிரசித்தம். ஆனல் முக்கியமாய்ப் பொருள் வருவாயைப் பற்றியேஇந்த ஒற்றுமை நிற்கின்றது.

௧௯௧௩-ல் இந்தியாவிலிருந்து ௫௧௩௦௩௯ அந்தர் பஞ்சு பிரிட்டனுக்கு ஏற்றப்பட்டு, இதற்குப் பிரதியாக ௪௪௮௨௦௮௨௯00 கஜம் பருத்தி நூல் துணி இந்தியாவுக்கு அனுப்பப்பட்டது. தென் ஆபிரிகாவிலிருந்து ௧௦௧௩௩௯ டன் தோலை வாங்கிக்கொண்டு ௧௮௨௪௧௯ ஜோடி பாதரட்சைகளை பிரிட்டன் அனுப்பியிருக்கிறது. இவ்வாறே இந்தியாவிலிருந்து ௯௯௧௭௯ டன், ஆஸ்திரேலியாவிலிருந்து ௧௪௯௫௮௪ டன தோல் தருவித்துக்கொண்டு, இந்தியாவுக்கு ௧௫௯௩௨௭ ஜோடிகளும் ஆஸ்திரேலியாவுக்கு ௨௧௦௩௧௩ ஜோடிகளும் பாதரக்ஷைகள் அனுப்பப்பட்டன. ஆஸ்திரேலியாவிலிருந்து ௨௯௫௦ லட்சம் பவுண்டு நிறையுள்ள ஆட்டு ரோமம் பிரிட்டனுக்கு அனுப்பப்பட, அங்கிருந்து ௧௫௮௯௪000 கஜம் கம்பளித்துணியாகவும் நூலாகவும் திரும்பிவந்தது. இவ்விதமே இந்தியாவிலிருந்து ௫௪௦ லட்சம் பவுண்டும் தென் ஆபிரிகாவிலிருந்து ௯௭௫-லட்சம் பவுண்டும் ரோமம் அனுப்பப்பட்டு பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்கு ௧௯௪௨௪௯00 கஜமும் தென் ஆபிரிக்காவுக்கு ௨௦௧௫00 கஜமும் கம்பளிகளும் நூலும் திரும்பியனுப்பப்பட்டன. பருத்தி, தோல், ரோமம் முதலிய இயற்கைப் பொருள்கள் குடியேற்ற நாடுகளிலிருந்து விலைக்கு வாங்கப்பட்டு பிரிட்டனில் அவைகள் வேலை செய்யப்பட்டு அந்தக் குடியேற்ற நாடுகளுக்கே ஈட்டித் துணிகளாகவும், பாதரக்ஷைகளாகவும் ஆடைகளாகவும் மற்றும் பல செயற்கைப் பொருள்களாகவும் திரும்பி யனுப்பப்படுகின்றன.

இவ்விதமான வர்த்தகக் கட்டுப்பாட்டைப் பூர்த்தி செய்வதற்குப் பிரிட்டிஷார் குடியேற்ற நாடுகளில் தங்கள் மூலதனத்தை ஏராளமாய்ப் போட்டு வைத்திருப்பது உதவிமாய் நிற்கின்றது. ௧௯௧௩-ல் பிரிட்டிஷார் ௩௭௧௪௦ லட்சம் பவுன் குடியேற்ற நாடுகளில் மூலதனமாகப் போட்டிருந்தனர். இதில் ௫௧௪௮ லட்சம் பவுன் கானடாவிலும் நியூபவுண்டுலாந்திலும், ௩௭௮ லட்சம் பவுன் இந்தியா இலங்கையிலும் ௩௭௦௧ லட்சம் பவுன் தென் ஆபிரிகாவிலும் ௩௩௨௧ லட்சம் பவுன் ஆஸ்திரேலியாவிலும் போடப்பட்டிருந்தது. குடியேற்ற நாடுகளின் அபிவிர்த்திக்கு வேண்டிய மூல தனத்தை பிரிட்டன் கொடுத்துதவி அந்நாடுகளின் வர்த்தகம், இன்ஷியூரன்ஸ், லேவாதேவி முதலிய சகல தொழில்களையும் ஏகாதிபத்தியத்தின் பொருட்டாகத் தானே கையாளுகிறது.

சென்ற முப்பது வருஷங்களாக இந்தப் பொருளாதாரத்தைப் பற்றிய கட்டுப்பாடு சீர் குலைந்து வருகிறது. இதற்குக் காரணம், ஜெர்மனியைப் போன்ற நாடுகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குட்பட்ட நாடுகளில் இயற்கைப் பொருள்களை வாங்கி அவற்றிற்குப் பதிலாகச் செயற்கைப் பொருள்களை அனுப்பிப் போட்டி போட வந்துவிட்டன. மேலும் குடி யேற்ற நாடுகளும் பிரிட்டிஷ சாமான்களின் மீது இறக்குமதி வரி விதித்துத் தாங்களே அந்தப் பொருள்களை உற்பத்தி செய்ய தொடங்கிவிட்டன.

யுத்தத்துக்கு முன் சில முக்கியமான பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் உள் நாட்டுக் கைத்தொழில்கள் சிறிது அபிவிர்த்தி யடைந்திருந்தன. ஆனல் யுத்தமானது அத் தொழில்களுக்குப் பெருத்த ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித்து விட்டது. ஏனெனில், பிரிட்டிஷ் செயற்கைப் பொருளும் மூலதனமும் குடியேற்ற நாடுகளுக்கு வந்துசேர முடியவில்லை; அன்றியும் குடியேற்ற நாடுகளில் உற்பத்தியாகும சாமான்களுக்குப் பிரிட்டனில் மிகுந்த கிராக்கி ஏற்பட்டுவிட்டது.

பிரிட்டனுக்குத் தலை சிறந்த கைத்தொழில்களாய் விளங்குவன இரும்பும் துணி நெசவுமேயாம். இவற்றில் ஏற்பட்ட மாறுதல்களைக் கவனிப்போம். ௧௯௧௫-ல் ௨௧௩௦௯ தொழிற்சாலைகள் கானடாவில் இருந்தன; ௧௯௧௭-ல் இவை ௩௪௩௯௨ ஆகவும் ௧௯௧௯-ல் ௩௮௩௪௪ ஆகவும்பெருகின. இந்த நான்கு வருடங்களில் மூலதனம் ௧௯௯௪௦ லட்சத்திலிருந்து ௩௨௫00 லட்சம் டாலராக ஏறியது. உற்பத்திப் பொருள்களின் மதிப்போ, ௧௪௦௭௦ லட்சத்திலிருந்து ௩௫௨00 லட்சம் டாலராக உயர்ந்தது.

கானடாவும் ஆஸ்திரேலியாவும் நூதனமாய்க் கைத் தொழில்களை மேற்கொண்டன. இந்தியாவும் தென் ஆபிரிகாவும் தொழிற் சாலைகளை ஏற்படுத்திக் கொள்வதில் சிறிது தாமதம் காட்டின. என்றாலும் யுத்தத்தினல் நேர்ந்த தொழி லூக்கத்தினல் இந்தியாவும் தென்னுபிரிகாவும் கூட அபிவிர்த்தி யடைந்திருக்கின்றன.

"இந்தியாவுடன் பிரிட்டிஷ் பருத்தித் துணி வியாபாரம் யுத்தத்துக்கு முன் ௩00-கோடி கஜத்திலிருந்து யுத்தத்துக்குப் பிறகு ௧00 கோடிக்கு இறங்கியது" என்று மாஞ்செஸ்டர் வர்த்தக சங்கத்தின் தலைவர் கூறினர். யுத்தத்துக்கு முன் இந்தியாவில் வேண்டிய மொத்தம் பருத்தித்துணிகளில் நூற்றுக்கு ௨௮ உள் நாட்டில் உற்பத்தியாகிக் கொண்டிருந்தது; யுத்தத்துக்குப் பிறகு நூற்றுக்கு ௯௧-ஆகப் பெருகியது. இந்த நிலைமையானது காந்தி இயக்கத்தினல் கை தூக்கி விடப்பட்டதென நாம் சொல்ல வேண்டியதில்லை.

இந்தியாவின் கம்பளி ஆலைகள் ௧௯௧௩-ல் ௪௨௨௨000 பவுண்டு சாமான்களை உற்பத்தி செய்தன. ௧௯௧௭-ல் ௧௨௪000 பவுண்டு சாமான் உற்பத்தியாகியது. ௧௯௧௩-ல் தோல் தொழில்களில் ௭௮௦௫ வேலையாட்களிருந்தனர்; ௧௯௧௭-லோ ௨௭௮௪௦ தொழிலாளர்கள் வேலை செய்தனர்.

இந்தக் குழவிப் பருவத்திய கைத்தொழில்களை விர்த்தி செய்யும் பொருட்டு பிரிட்டிஷ் குடியேற்றநாடுகள் காப்பு வரிகளை ஏற்படுத்தின. யுத்தத்துக்குப் பிறகு பிரிட்டனும், ஐரோப்பாவிலிருந்து கைத்தொழிற் சாமான் மிகுதியாக வந்து குவியாதபடி காப்பு வரியை ஏற்படுத்திக் கொண்டது. ஏற்கனவே சேம்பர்லேன் ஏகாதிபத்தியத்தைப்பற்றி நன்கு ஜனங்களுக்குக் கற்பித்திருந்தபடியால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துள் உற்பத்தியாகும் பொருள்களுக்குக் குறைந்த வரியை ஏற்படுத்தும் கொள்கையை யநுசரித்தனர்.

இவ்விதமிருக்கும் குடியேற்ற நாடுகள் இன்னும் எவ்வளவு காலம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குள் தங்கியிருக்கும்? அவ்வாறு தங்கியிருப்பது அவ்வவர் நன்மைக்கு ஏற்றதாயிருக்கும் வரையில் தான். ௧௯௧௩-ம் வருடத்தில் குடியேற்ற நாடுகளைப் பிணித்திருந்த கட்டுகள் இப்போது நெகிழ்ந்து போயின. அவைகள் தங்கள் செயற்கைப் பொருள்களை இனி பிரிட்டனுக்கு விற்கவேண்டிய அவசியமில்லை; இதர நாடுகள் வாங்கத்தயாராயிருக்கின்றன. பிரிட்டிஷ் செயற்கைப் பொருள்களையும் குடியேற்ற நாடுகள் வாங்கவேண்டியதில்லை; அவைகள் தாங்களே செய்துகொள்ளவும் கூடும்; இதர நாடுகளிலிருந்து வாங்கிக் கொள்ளவும் கூடும். புதிய மூலதனத்துக்கு இனிக் குடியேற்ற நாடுகள் பிரிட்டனை எதிர்பார்க்கத் தேவையில்லை; பிரிட்டனைக் காட்டிலும் எத்தனையோ மடங் கதிகமான மூலதனத்துக்குரிய செல்வம் யூனைட்டெட்ஸ்டேட்ஸிலிருக்கிறது. அன்றியும் உள்நாட்டுக் கைத்தொழில் அபிவிர்த்தியடைவதற்கு ஏற்ற வண்ணம் ஒவ்வொரு குடியேற்ற நாடும் தனக்கு வேண்டிய புதிய மூலதனத்தைத்தானே கொடுக்கும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைப் பிணித்து வைத்துக் கொண்டிருந்த பொருளாதாரத்தைப்பற்றிய ஒற்றுமையானது சீர்குலைந்து போய் விட்டது. பிரிட்டனில் வேலையின்றிமிகுதியாகவிருக்கும் தொழிலாளிகள் குடியேற்ற நாடுகளுக்குப் போய்ச் சேரும் வரையில், ஏகாதிபத்தியக் கட்டுப்பாட்டை நிறுத்தி வைத்திருப்பதுதான் இப்போது பெரிய யோசனை யாயிருக்கிறது.

## குமரன் வாரப்பதிப்பு.

உள்நாட்டுக்கு வருஷசந்தா ரூ. ரு-0-0
மலாய் நாடுகட்கு வெள்ளி உ-டு0
சைகோன் முதலிய நாடுகட்கு ௬-0-0
மாதிரிப் பிரதி இனம்.

### விளம்பர விகிதம்.

மாதம் ஒன்றுக்கு பத்தி
க-க்கு ரூ. உ0—0—0
ஷை அரைக்கு ரூ. கரு—0—0
மானேஜர்,

குமரன் ஆபீஸ், காரைக்குடி.







## குமரன்—மாதப்பதிப்பு.

—:o:—

இது ஒரு சிறந்த தமிழ் மாதப் பத்திரிகை.

| | | |
|---|---|---|
| வருஷ சந்தா உள் நாட்டுக்கு | ரூ. | ௩—0—0 |
| மலாய் நாட்டுக்கு | வெள்ளி | உ—உரு |
| சைகோன் முதலிய பிற நாடுகட்கு | ரூ. | ச—0—0 |
| தனிப் பிரதி | | 0—௪—0 |
| முதல் வருஷ சஞ்சிகை கஉ-ம் சேர்ந்தது காலிகோ பைண்டு புஸ்தகம் | | உ—0—0 |
| இரண்டாம் வருஷ சஞ்சிகை கஉ-ம் சேர்ந்தது. | | ௩—அ—0. |






சொ. முருகப்பசெட்டியாரால்(பத்திராதிபர்)காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

